தாலே பண்ணின நிஷித்₃த₄ாநுஷ்டா₂நம். (மிடைந்தவை) ஶரீராரம்ப₄ஹேதுவான பாபங்களுமாக நெருங்கினவை. (மீண்டொழியவேண்டில்) 39."अहं त्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि" (அஹம் த்வா ஸர்வபாபேப்₄யோ மோக்ஷயிஷ்யாமி) என்னும்படி ஒரு ராஜகுலஸம்ப₃ந்த₄த்தாலே மீளாதபடி போக

மான து₃:க்க₂ங்கள், ஶரீரமான வ்யாதி₄, வர்த்தமான ஶரீரங்கொண்டு பண்ணுகிற நிஷித்₃த₄ாசாரம் என்றும் போலே ப₃ஹுவித₄மாய்க்கொண்டு பரணிக்கடுவரித்தால்

செய்கிற புண்யபாபங்களைக் குறிக்கிறது. புண்ணியத்தோடு பாபத்தோடு வாசியற இவ்விரண்டும் ஸம்ஸாரத்தில் கட்டும் விலங்குகளாயிருக்கையாலே இரண்டும் இவனுக்கு அநிஷ்டமாகையாலே இரண்டையுமே 'பாவம்' என்கிறார். 'அருவினை' 'பாவம்' என்பவை இவன் செய்யும் நற்கருமங்களையும், தீய கருமங்களையும், அது காரணமாகப் பரமபுருஷனுக்கு இவன் பால் ஏற்படும் ப்ரீதிகோபங்களையும் குறிக்கின்றன. 'அருவினை' என்று அஜ்ஞானப் பூர்வமானவற்றையும், 'பாவம்' என்று அதற்குக் காரணமான கர்மங்களையும் குறிப்பதாகவும் கொள்ளலாம். (மிடைந்தவை) இவையெல்லாம் இச்சேதனன் தானே தன்னால் வெளியேறமுடியாதபடி சூழ்ந்துகொண்டவை. பட்டுப் பூச்சியைப்போன்ற சில பூச்சிகள் தம்மைச் சுற்றித் தாமே கூடுகட்டித் தம்மை மூடிக்கொண்டுவிடும். பிறகு அவற்றாலும் அக்கூட்டைவிட்டு வெளியேறமுடியாமல் அங்கேயே கிடந்து அழியும். அதுபோலவே இச்சேதனனும் தன்னையே அறியமுடியாதபடி தன்னைச் சுற்றிப் பாபங்களாகிற கூட்டைக் கட்டிக்கொண்டு வெளியேறமுடியாமல் தவிக்கிறான் என்று கருத்து. *(மீண்டு ஒழியவேண்டில்)* இத்தனைகாலமாக இவன் பயப்பட்டுவந்த பாவங்கள் இவனைக்கண்டு பயப்பட்டு 'கம்மெனாதே கைவிட்டோடி' [பெரியாழ்திரு 5-4-3] என்கிறபடியே ஓடவேண்டுமானால். தொடர்கிற பாம்பைத் திரும்பிப் போடச் செய்யவேண்டுமானால். (ஒழியவேண்டில்) வாஸனையோடே விட்டுப்போகவேண்டுமானால். *"மாமேகம் சரணம் வ்ரஜ-ஸர்வபாபேப்₄யோ மோக்ஷயிஷ்யாமி"* [ஸ்ரீகீதைசரமஶ்லோகம்]

வேண்டில். (துடங்கிடையை) பிரியத்தகாதவளை. (முன் னித்யாதி,) பண்டு லங்கையிலே வைத்தவனுடைய மிடுக் கொழிய. (தன் வில் அங்கை வைத்தான்) தன்னுடைய திருவில்லை அழகிய திருக்கையிலே வைத்தவன் உபாயம். இத்தால், ஸர்வேஸ்வரனுக்கு போக்யமாயிருந்துள்ள ஆத்மாவை "என்னது" என்றிருக்குமவன் பிராட்டியைப் பிரித்த ராவணனோடு ஒக்குமென்னுமிடமும். "இவ்வாத்மா அவனுடையது" என்று அநுஸந்தித்தவனுக்குப் பிராட்டியிருந்த மார்விலே அம்பேற்றுப் பரிஹரித்தாற்போலே பரிஹரிக்கு மென்னுமிடமும். அவனோடு கூடினவர் உபாயமென்கை

---

போலே ஆத்மாவைத் தெ... போதைப்படி நூடிக்கிடக்கிற இவை [illegible] விட்டுப்போகவேண்டில், க்ஷணகாலமும் விஸ்லேஷிக்கத்தகாதபடி சேர்ந்த இடையழகையுடைய பிராட்டியை முன்பொரு காலத்திலே லங்காபுரிக்கே கொண்டு போய்ச் சிறைவைத்த ராவணனுடைய மிடுக்கு அழியும்படிக் கீடாகப் பண்டொரு காலத்திலே தன்னுடைய ஸ்ரீசார்ங்கத்

---

[என்னையொருவனையே சரணமடை; எல்லாப்பாபங்களினின்றும் விடுவிக்கிறேன்] என்ற ஸர்வசக்தியை சரணமடைவதே வழி என்கிறார் மேலே.—(துடங்கிடையை) துவளாநிற்கும் நுண்ணிய இடையையுடைய தேவிபிராட்டியை. ஒருகணம் பிரிந்தாலும் தாளமாட்டாள் என்று தழுக்குறவேண்டிய தேவியை. (முன் இலங்கை வைத்தான்) முன்னொரு காலத்தில் பிரித்து இலங்கையிலே சிறைவைத்த பாவியான இராவணனுடைய. (துடங்கிடையை இலங்கை வைத்தான்) தாயையும் தகப்பனையும் பிரித்தான். ஏகத்ரவ்யத்தை பிந்னமாக்கினான்! (முன்) அதுவும் ஒருகாலே! எனத்துன்புறுகிறார். (முரண் அழிய) அவனுடைய பலம் அழியும்படியாக. (முன் ஒருநாள்) இதுவும் ஒருநாளே! என இன்புறுகிறார். (தன் வில் அங்கை வைத்தான் சரண்) தன் ஶார்ங்கவில்லை அழகிய கையிலே வைத்தவனே ஸர்வ பாபங்களும் போவதற்கு உபாயமாவான். (தன் வில் அங்கை வைத்தான்) தன் வில்லிலே அழகிய கையை வைத்தவன் என்றுமாம். தோளில் மாட்டியிருக்கும் வில்லிலே கையை வைத்தவுடனே ராவணனின் மிடுக்கு அழிந்தது என்று கருத்து.

யாலே, பற்றுவார்கள் அவன் முன்னாகப் பற்றவேணுமென்னுமிடமும் சொல்லுகிறது.

திருவுள்ளம்! இந்த்ரிய ஜயம் பண்ணு என்றது, தொழு என்றது, திருநாமம் சொல்லு என்றது, நினை என்றது-பல்படிகள் சொன்ன இவற்றுக்குத் தாத்பர்யமென்? என்னில்; இதுக்குக் கீழெல்லாம் ஷட்கத்ரயத்திற் சொன்ன வார்த்தைபோலே ஸ்வரூபம் விசத₃மாகைக்குச் சொன்ன நிலை; இது சரமஶ்லோகத்தில் நிலைபோலே. உணர்ந்தவன்று அவனல்லதில்லை.

---

திருவில்லை அழகிய திருக்கையிலே வைத்த த₃ஶரதா₂த்மஜனே உபாயம்.

இத்தால் பிராட்டி விஷயத்திற்போலே ஆஶ்ரிதவிஷயத்தில் ஈஶ்வரன் உகந்து கார்யஞ்செய்யுமென்னுமிடமும். அவன் ஸ்வரக்ஷணத்திலே இரங்குமன்று இவனுக்கு ...

---

இப்ரகாரம் இந்நூலாகிற ரத்னஹாரத்திற்கு நடுநாயகக் கல்போலே அமைந்துள்ளது. இதிலிருந்து தெளிவாகும் ஸாரார்த்தங்களாவன: — வினை முதலியவற்றால் சூழப்பெற்று இந்த ஸம்ஸாரத்தில் ஜீவன் இருப்பது ராக்ஷஸிகளால் சூழப்பட்டு அசோகவனிகையிலே பிராட்டியிருந்த இருப்பை ஒக்கும்- பிராட்டியானவள் தன்னை விடுவித்துக்கொள்ளத் தான் முயற்சி செய்யாமல், "தத் தஸ்ய ஸத்₃ருஶம் ப₄வேத்" [ரா-ஸு 39-30] [என்னை அழைத்துச்செல்வது ராமபிரானுக்கே தக்கது] என்று இருந்தாற்போலே, இவனும் மற்ற உபாயங்களில் கைவைக்காமல் அவனையே க₃தியாகப் பற்றிநிற்கவேணும். இதுவே இவன் செய்யவேண்டியது என்பதையும், இப்படி இவன் இருந்தானாகில் அவன் பிராட்டியின் கார்யத்தை மார்பிலே அம்பேற்று உகந்து செய்ததுபோலே இவனுடைய பாபவிமோசனத்தையும் உகந்து செய்வான் என்பதையும், அவனோடு கூடியவன் உபாயமாகையாலே அவனைச் சரண்புகும் போது, பிராட்டியைப் புருஷகாரமாக முன்னிட்டுச் சரண்புக வேண்டும் என்பதையும், ஸர்வேஶ்வரனுக்கு இனியதான ஆத்மவஸ்துவை 'என்னுடையது' என்று நினைப்பவர்கள்

(அடைந்த அருவினை) அவித்₃யாதி₃கள். ஆத்மா ஹேய ஸம்ஸர்க்க₃த்துக்கு அநர்ஹனாகையாலே "அடைந்த" என்றது. பரமாத்மாவுக்கும் ப்ரவேசம் ஒக்குமிறே. 59. "अनश्नन्" (அநஶ்நந்). (அல்லல் நோய்) ஆதி₃, வ்யாதி₃. (பாவம்) ஶரீரத்துடன் பண்ணும் பாவம். (மிடைந்தவை) ஸமிதையிடா ஆணிபோலே பரணிக்கூடு வரிந்தாற்போலே. (மீண்டொழியவேண்டில்) தொடருகிற பாம்பைத் திரிய விடுத்தாற்போலே. 39. "सर्वपापेभ्यो मोक्षयिष्यामि" (ஸர்வ பாபேப்₄யோ மோக்ஷயிஷ்யாமி) இறே. ஸர்வஶக்தியைக் கொண்டு கார்யங்கொள்ள வேண்டாவோ? (நுடங்கிடையை)

---

ஸம்ஸாரத்தின் னென்றுமிடமும், அவன் அபேக்ஷிதம் செய்யுமிடத்தில் இவன் புருஷகாரமென்றுமிடமும், அவன் வஸ்துவை எனக்கென்பார் ராவணாதி₃கள் பட்டது படுவர் என்றுமிடமும் சொல்லிற்றாய்த்து. இத்₃ர்ப்யத்தைப் பண்ணு. அவனைத்தொழு. அவன் திருநாமத்தைச் சொல்லு,

---

பிராட்டியைத் தனக்கென நினைத்த இராவணன் பட்டது படுவார்கள் என்பதையும் இப்பாசுரம் உணர்த்துகிறது.

மற்ற உபாயங்களைவிட்டு, அவனையே பற்றவேணும் என்று இப்பாசுரம் சொல்லுகிறதாகில், முன் பாசுரங்களில் "சிந்தித்திரு" [41] "வாரி சுருக்கி...உணர்வார் காண்பரே" [47] "மருவாழி நெஞ்சே" [48] "மூவர்க்கிற்பார்க்கல்லால்.........ஆதி காண்பார்க்குமரிது" [49], "அரிய புலனைந்தடக்கி......புல்லில்...... எளிது" [50] "திருநாமம் எண்" [51] "தொழுது எழுதும் எழு" [58] என்று மற்ற உபாயங்களைப் பற்றச்சொல்லுவது போலே அருளிச்செய்வானேன்? எனில்: இப்பாசுரத்துக்கு விரோத₄மில்லாமல் காணும்போது, தே₃ஹயாத்ரை நடப்பதற்காகத் திருநாமஸங்கீர்த்தனம் முதலானவற்றைச் செய்யும்படி அருளுகிறாரே யொழிய உபாயபு₃த்₃தி₄யோடு அவற்றைச்செய்யச் சொல்லி விதி₄க்கவில்லை என்று கொள்ளலாம். அப்படியல்லாமல், கீ₃தையில் கண்ணன் மூன்று ஷட்கமாயிருக்கும் பதினெட்டு அத்தியாயங்களாலும் கர்மம் ஞானம் ப₄க்தி

ஏகத்ரவ்யத்தை பிந்நமாக்கின. (இலங்கை வைத்தன்; தாயையும் தமப்பனையும் பிரித்த வாயஸ் மிடுக்குமிப. பிராட்டி அம்பெய்யுமன்று இவரால் போக்கலாவது. 60. " [illegible] " (தத் தஸ்ய ஸத்ருஸம் பவேத்) கூர்மையை விப்லவித்திருக்குமத்தனை; அவனுக்குப் பரிபு மாபோலே பரியும் அவதார ஸௌலப்யம். பிறந்து முன்னே உன்னைப் பெறுகைக்கு யத்நம் பண்ணுநின்றான்; இனி ப்ரதிபத்தியே உள்ளது. 59.

60. சரணா மறைபயந்த தாமரையா னோடு
மரணாய மன்னுயிர்கட் கெல்லாம் — அரணாய
பேராழி கொண்ட பிரானன்றி மற்றறியாது
ஓராழி சூழ்ந்த வுலகு.

---

அவனை யின்ன என்றுத்போலே கீழ்ப் பாட்டியாகச் சொல்லிற்றெல்லாம் ஷட்சத்ரத்தில் வார்த்தைபோலே, ஸ்வரூப விரோதமாகச் சொன்னவை; இது சரமஸ்லோகத்தில் நிலைபோலே, உணர்ந்தவன்று அவனல்லாது உபாயமில்லை யென்கை. 59.

---

முதலான பல உபாயங்களையும் விதித்து, 'எல்லாவற்றையும் நம்மால் இவை செய்யப்போமோ? இவற்றைச் செய்து கடைத்தேறுவது தான் எப்படி?' என்னும் சோகத்தை அர்ஜுனனுக்கு விளைத்து, அதற்குப்பின் சரமஸ்லோகத்தை உபதேசித்தாற்போலே, இவரும், அனுஷ்டிக்க அரிதாய், தம் அத்யந்த பாரதந்த்ர்ய ஸ்வரூபத்திற்கு ஒவ்வாததான மற்ற உபாயங்களை முன் பாசுரங்களில் திருவுள்ளத்தை நோக்கி உபதேசிக்க, அதனால் ஸ்வரூபம் தெளியவடைந்து திருவுள்ளத்திற்கு சோகம் பிறக்க, இந்தப்பாசுரத்தில் ஸ்வரூபத்திற்கு அனுகுணமான சரணாகதியை வெளியிடுவதாகவும் கொள்ளலாம். இச்சேதனன் தன் ஸ்வரூபத்தை உணர்ந்தவன்று அவனல்லாது உபாயமில்லை என்பது இப்பாசுரத்தின் ஸாரார்த்தம். இந்நூலின் ஸாரார்த்தமும் இதுவே. 59.

**பதவுரை:— சரண்**-(நாலுவகைப் புருஷார்த்தங்களுக்கும்) உபாயமாக, **மறை**—வேதத்தை, **பயந்த**—உபதேசிக்கப் பெற்ற, **தாமரையாளோடு** — உந்தித்தாமரையில் பிறந்த ப்ரமனுடன் கூட, **மரணம்**—மரணத்தை இயற்கையாகக் கொண்ட, **மன் உயிர்கட்கு எல்லாம்**—நித்யமான ஜீவர்களுக்கெல்லாம், **அரண் ஆய** — ரக்ஷகமாயிருப்பவைகளை, **பேராழி கொண்ட பிரான் அன்றி** — பெரிய சக்கரத்தைக் கையில் கொண்ட எம்பிரானைத் தவிர, **மற்று**—(அவனைக் காட்டிலும்) வேறாயிருப்பதும், **ஓர் ஆழி சூழ்ந்த**—ஒப்பற்ற கடலினால் சூழப்பட்டிருப்பதுமான, **உலகு**—உலகிலுள்ளோர், **அறியாது**—அறியமாட்டார்கள்.

அவ:— அறுபதாம் பாட்டு. (சரணித்யாதி) கீழ் அவனையே உபாயமென்றது; பேறு இவர்களதேயானபின்பு இவ்வாத்மாக்கள் உபாயமாலாகாதோ? என்னில், கீழ் போக்கறியான்; இப்போது தாங்கள் படுகிறது இன்னதாலே என்றறியார்கள்; வரக்கடவது அறியார்கள்.

---

**அவதாரிகை:**— இவன் பலபோக்தாவாயிருக்க, அவன் ஸாதநமாகவேண்டுகிறதென்? என்ன; ஸர்வஜ்ஞனாய்,

---

60. அவ:—முன் பாசுரத்தில் அவனே உபாயம் என்றார்; “மோக்ஷமாகிற பயன் இச்சேதனனுடையது; ஆகையால் உபாயமும் இவனுடையதாகவேண்டியிருக்க, அவன் உபாயம் என்பானேன்?” என்னும் கேள்வியெழ, ‘இவனுடைய தன்மையைப் பார்த்தால் தனக்குக்கீழ் நடந்தவற்றையும் அறியான்; இப்போது இப்பாடுபடுகிறது எதனாலே என்பதையும் அறியான். இனி வரப்போவதையும் அறியான். ஸர்வேச்வரனை அவனோவென்னில், இவற்றையெல்லாம் அறியும் ஸர்வஜ்ஞனாயிருப்பதோடன்றியில் இவனுடைய தாழ்வுகளைத் தவிர்த்து வாழ்விக்கவல்ல ஸர்வசக்தியுடையவனுமிருக்கிறான். அப்படியிருக்கும்போது அவன் உபாயமாகமுடியுமே யொழிய இவன் உபாயமாகமுடியுமோ?” என்கிறார்.

ஈச்வரன் இவை எல்லாம் அறிந்து பரிஹரிக்கவல்ல ஜ்ஞாந ஶக்த்யாதிகளை உடையவன். a "பழகியான் தானே" என்னுமாபோலே. ஆகையாலே அவனே உபாயமாமித்தனை; இத்தை லோகம் அறியாது என்கிறது.

ஸர்வஶக்தனுயிருப்பானொருவன் உபாயமாமித்தனைபோக்கி, அஜ்ஞனாய், அஶக்தனான இவனால் செய்யலாவதுண்டோ? என்கிறார்.

இப்பாசுரத்தை மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது, "உயிர்களுக்கெல்லாம் ரக்ஷகனான ஸர்வேச்வரனைத் தவிர வேறொன்றையும் உலகம் அறியாது" என்னும் பொருள் தோன்றும். ஆப்பான் என்பவர் இப்பொருளைச்சொல்லி, "இவ்வுலகம் எம்பெருமானையன்றி அறியாமலிருந்ததோ?" என்று ஜீயரைப் பரீக்ஷிப்பதற்காகக் கேட்க, அவரும் 'நீரே பொருளை உரைப்பீர்' என்று கேட்க, "உலகம் என்பது உயர்ந்தோரைக் குறிக்குமாகையால், உயர்ந்தோர் எம்பெருமானையன்றி அறியார்" என்று ஆப்பான் உரைக்க, இதுபற்றி பட்டரைக் கேட்க, "உலகு என்னும் பதம் உயர்ந்தோரைக் குறிப்பதாகில் 'ஓராழிசூழ்ந்த உலகு' என்று விசேஷித்திருப்பது பொருந்தாது. இப்படி விசேஷித்திருப்பதாலேயே உயர்ந்தாரோடு தாழ்ந்தாரோடு வாசியற எல்லா உலகினரையும் இது குறிக்கிறதென்பது தெளிவு. ஆகையால், மன்னுயிர்களுக்கெல்லாம் அரணாய - ரக்ஷகமாயிருப்பவைகளை ஸர்வேச்வரன் அறிவானேயொழிய உலகம் அறியாது" என்று பட்டர் உணர்த்தினார் என்னும் ஐதிஹ்யம் பெரியவாச்சான்பிள்ளையுரையில் காணத்தக்கது.

*வ்யா.—(சரண் மறை பயந்த)* தாங்கள் விரும்பிய பலன்களைப் பெறலாம்படியான உபாயங்களை அறிவிக்கையாலே வேதம் 'சரண்' [உபாயம்] எனப்படுகிறது. இப்படிப்பட்ட வேதத்தை உலகினர்க்கு உபதேசிக்கையாலே பிரமனை மறை பயந்தவன் என்கிறது. இல்லாவிடில் வேதத்தை அபௌருஷேயம் என்பது ஒட்டாதே. 'பயந்த' என்றது 'பயக்கப்பெற்ற' என்றபடியாய், தனக்கும் பிறர்க்கும் நன்மைக்காக

a நான்.திருவ. 22.

வ்யா:— (சரணுவித்யாதி₃) எல்லார்க்கும் ஹிதத்தைச் சொல்லக்கடவதான வேத₃த்தை ஓதுவிக்கப்பட்ட ப்ரஹ்மாவோடு. "சரணுமறைபயந்த" என்றத்தை, "அரணுய" என்றத்தோடே கூட்டி ஈஶ்வரனுக்கு விஶேஷணமாக்கவுமாம். (மரணுய மன்னுயிர்கட்கெல்லாம்) கல்பாதி₃யிலே யுண்டாய், கல்பாந்தத்திலில்லையாகிற ப்₃ரஹ்மாவோடேகூட 61. "ந ஜாயதே ம்ரியதே வா" (ந ஜாயதே ம்ரியதே வா) 62. "ஜாயஸ்வ ம்ரியஸ்வ" (ஜாயஸ்வ ம்ரியஸ்வ) என்று ஜநநமரண த₄ர்மாக்க

உரை:— 'அபி₄மதவித்₃தி₄க்கு அநுரூபமான உபாயங்களை அறிகைக்கு ஸாத₄னமான வேத₃த்தை நாட்டுக்கு உபதே₃ஶமுகேந உண்டாக்கின ஜ்ஞாநமாஹாத்ம்யத்தை உடையோம்' என்று அபி₄மானித்திருக்கிற ப்₃ரஹ்மா

வேத₃ங்களை எம்பெருமானுலே ஓதுவிக்கப்பட்ட பிரமன் என்கிறதாகவுமாம். ஆட்டான் நிர்வாஹத்தில் "மறைபயந்த.........மன்னுயிர்கட்கெல்லாம் அரணுய.........பிரான்" என்று ஸர்வேஶ்வரனுக்கு விஶேஷணமாகவுமாம். *(மறை பயந்த தாமரையானேடு)* 'இப்படிப்பட்ட வேத₃த்தையும் உபதே₃சிக்கவல்ல ஞானப்பெருமையை உடையேன்' என்னும் அபி₄மானத்தையுடைய பிரமன். *(தாமரையான்)* 'எம்பெருமானிடமிருந்து நேரே தாமரையில் பிறந்தோம்' என்று அபி₄மானித்திருப்பவன். *(தாமரையானேடு மரணுய உயிர்கட்கெல்லாம்)* கல்பத்தின் தொடக்கத்தில் உண்டாகி, கல்பத்தின் முடிவில் அழியும் பிரமனேடு. "ஜாயஸ்வ ம்ரியஸ்வ" என்று முதல் கணத்தில் தோன்றி மறுகணத்தில் அழியும் கிரிமிகளோடு வாசியற எல்லா உயிர்களுக்கும். *(மரணுய உயிர்கள்)* மரணத்தையே இயற்கையாக உடைய உயிர்கள் என்று ஶரீரத்தின் தன்மையைச் சொல்லுகிறது. *(மன்னுயிர்)* நிலை நிற்கும் உயிர்கள் என்ற ஆத்மாவின் தன்மையைச் சொல்லுகிறது. "*ந ஜாயதே ம்ரியதே வா கதா₃சித்*" [கீ₃தை 2-20] [(ஆத்மா) ஒருபோதும் பிறக்கிறதுமில்லை; இறப்பதுமில்லை] என்று சொல்லப்பட்டதன்றே. *(மரணுய மன்னுயிர்கட்கெல்லாம்)* மரணத்தையே இயற்கையாக உடையவர்கள் என்றது

ளான உயிர்களுக்கெல்லாம். (அரணாய) ரக்ஷகமான. (பேராழியித்யாதி,) கீழ் பெருமான் ப்ரஸ்துதராகையாலே கடலை வெதுப்பித்து. தமக்கு வசமாக்கிக்கொண்ட சக்ரவர்த்தித் திருமகனென்னவுமாம். கையிலே திருவாழியையுடையனாய் உபகாரகனான ஸர்வேஶ்வரனுடைய உபாயப,ாவத்தை அறிவர். (மற்றறியாதோராழி சூழ்ந்த உலகு) மற்றாயிருந்துள்ள கடல்சூழ்ந்த லோகமானது உபாயமாக அறியாது.

(சரணாமறைபயந்த) அபி,மதஸித்,தி,களுக்கடைத்த உபாயபே,த,ங்களையுடைய வேத,ங்களை ஜக,த்துக்கு ஓதுவிக்கும் ப்,ரஹ்மவித,ாம்வரனான ப்,ரஹ்மா மந்த்ரக்கும் என்பது. (மரணாய) சாவது பிறப்பதாகிற ஶரீரத,ர்மம். (மன்னுயிர்) ஆத்மத,ர்மம்; மரணத,ர்மங்களுடைய அஜ்ஞு

---

வோடே கூட மரணத,ர்மாக்கவாசகையாலே அறிவுகேடராய், நித்யமான ஸ்வரூபத்தை உடையரான ஆத்மாக்களுக்

---

மற்றுள்ள தாழ்வுகளுக்கெல்லாம் உபலக்ஷணமாய். இவர்களுடைய அறிவுகேடு அஶக்தி முதலானவற்றைக் காட்டுகிறது. (அரணாய) இவர்களுக்கு ரக்ஷகமானவற்றை. ஆப்பான் நிர்வாஹத்தில் "அரணாய பிரான்" என்று கூட்டுவது. (பேராழி கொண்டபிரானன்றி) ரக்ஷணத்துக்குறுப்பாக மிகப்பெரியவனான ஸுத,ர்சனாழ்வானை த,ரித்த பெருமானே இவற்றுக்கு ரக்ஷையானவற்றை அறிவான். (பிரான்) உபகாரம்செய்தவன். (பேராழி கொண்ட பிரான்) மூன் பாசுரத்தில் ராமபிரானைச் சொல்லுகையாலே. இங்கேயும். 'பெரிய கடலை வெதுப்பித் தன்வசப்படுத்திக்கொண்ட பிரான்' என்று அப்பிரானையே சொல்லுகிறதாகவுமாம். (மரணாய மன்னுயிர் — பேராழி கொண்ட பிரான்) இவற்றின் அஜ்ஞான அஶக்திகளையும், அவனுடைய ஜ்ஞானஶக்திகளையும் சொல்லுகிறது. (மற்று ஓராழிசூழ்ந்த உலகு அறியாது) அவனுக்கு எதிர்த்தட்டாயிருக்கும் உலகம் தனக்கு நன்மைகளைத்தான் அறியாது. (ஓராழி சூழ்ந்த உலகு) ஒப்பற்ற கடலாலே சூழப்பட்ட உலகம். 'உலகம்' என்றது உலகிலுள்ளாரைக் குறிக்கிறது.

னும், அமாத்தனும், அரணும் ஆணை - இவற்றை விநாயகன் அறியுமத்தனை. 63. "மூடோ நாபிஜாநாதி" (மூடோ,ாயம் நாபி, ஜாநாதி). 64. "வேதாந்த" (வேத,ாநம்). ஆப்பான், ஜீயர்க்கு, "ஜீயரே! இவ்வுலகு எம்பெருமானையல்லாது இருந்ததோ?" என்ன, "அதுக்குப் பொருளென்?" என்ன, "உயர்ந்தோர் எம்பெருமானை யல்லதறியார்" என்ன, இத்தை பட்டரைக் கேட்க, "அதுக்கொரு குற்றமுண்டு, 'ஓராழி சூழ்ந்த' என்று விசேஷிக்கவொண்ணாது" என்ன, 'இதுக்குப் பொருளோ?' என்ன, "ஜீயரே நான் சொல்லும் பொருளென்!" என்ன, "உலகறியாது" என்ன, "அதுவே பொருள்" என்றார். இத்தைப் பிள்ளையும் ஜீயருக்கு உரைக்க, 'திருக்கலிகன்றிதாஸர் மறந்ததை உணர்த்தினார்' என்றருளிச் செய்தார். 60.

61. உலகு முலகிறந்த ஊழியும் ஒண்கேழ்
விலகு கருங்கடலும் வெற்பும்—உலகினில்
செந்தீயும் மாருதமும் வானும் திருமால்தன்
புந்தியி லாய புணர்ப்பு.

---

கெல்லாம் ரக்ஷையானவற்றை, ரக்ஷாபரிகரமான பெரிய திருவாழியை உடையவனை உபகாரகனையல்லது, வேறு அத்,விதீயமான கடலாலே சூழப்பட்ட பூ,லோகத்திலுள்ள ப்ராணியானது அறியாது.

இத்தால் சிறியாரோடு பெரியாரோடு வாசியறத் தந்தாமுடைய ரக்ஷணம் தாங்களறியமாட்டார்கள்; இவனே ஸர்வர்க்கும் ரக்ஷாப்ரகாரம் அறியுமவன் என்றதாய்த்து. 60.

---

ஆக, இப்பாசுரத்தால் "சிறியாரோடு பெரியாரோடு வித்தியாசமில்லாமல் இவ்வுலகிலுள்ளாரனைவரும் தங்களுக்கு நன்மை பெறு என்பதைத் தாங்களறியார்கள். ஸர்வேச்வரன் ஒருவனே இவர்களனைவர்க்கும் நன்மையை அறியவல்லவன்' என்கிறது. 60.

**பதவுரை:**— **உலகும்** — எல்லா லோகங்களும், **உலகிறந்த ஊழியும்**— உலகம் அழிந்துபோனாலும் இருக்கும் காலமும், **ஒண் கேழ் விலகு கரும் கடலும்** — அழகிய நிறத்தையுடையதாய், அலையெறியாநிற்பதாய், கறுத்திருப்பதான கடலும், **வெற்பும்** —(உலகிற்கு ஆதாரமான) மலைகளும், **உலகினில்** — லோகத்தில் காணப்படுகிற, **செம் தீயும்**— சிவந்த அக்நியும், **மாருதமும்** — காற்றும், **வானும்**— ஆகாசமும், **திரு மால் தன்**— பிராட்டியுடன் கூடிய எம்பெருமானுடைய, **புந்தியில் ஆய**— ஸங்கல்பத்தினால் உண்டாகிய, **புணர்ப்பு**— ஸ்ருஷ்டி.

**அவ:**— **அறுபத்தோராம் பாட்டு.** (உலகு) **ஹிதத்திலே அறியாததுக்கு, தந்தாமுடைய உத்பத்தியிலே வைத்து அறிவுணர்த்துகிறார்.**

**அவதாரிகை:**— அவனையொழிய இவை தந்தாமுக்கு ஹிதமறியாதென்றீர்; அவன்றான் இவைதன்னை நோக்க வேண்டுமென்கிற ஹேதுவென்? என்னில்; பெற்றவனையொழிய பார்ப்பாருண்டோ? என்கிறார்.

61. *அவ:*— அவனைத்தவிர மற்ற உயிர்கள் தங்களுக்கு நன்மையைத் தாங்களறியமாட்டார்கள் என்றீர். அவன்தான் இவைகளை ரக்ஷிக்கவேண்டுமென்ற நிர்ப்பந்தமென்ன? எனில்; இவற்றைப் பெற்றவன் அவனாகையாலே அவன் நோக்காதொழியான் என்கிறார்.

*வ்யா:*— (*உலகும்*) பூமி முதலான உலகங்களும். (*உலகிறந்த ஊழியும்*) உலகங்களெல்லாம் லயப்பட்டு அழிந்துபோதுமிருக்கும் ஸம்ஹாரகாலமும். இத்தால் இந்த லீலாவிபூதியில் காலம் அநித்யம் என்னும் பக்ஷம் ஆழ்வார் உகந்ததன்று என்று தெளிவாகிறது. (*ஒண்கேழ் விலகு கருங்கடலும்*) அழகிய நிறத்தையுடையதாய், அலையெறிவதாய், கண்குளிரக் கறுத்திருப்பதான கடலும். (*வெற்பும்*) பூமிக்கு ஆணியடித்தாற்போலே ஆதாரமாயிருக்கும் குலமலைகளும். (*உலகினில் செந்

வ்யா— (உடலும்) லோகமடங்கத் தானே ஸம்ஹரித்த காலமும். (ஒண்கேழ்) அழகிய நிறத்தையுடையதாய் அலையெறியாநின்ற கடலும். லோகத்துக்காதாரமான மலையும். (செந்தீயித்யாதி) இவ்வோக்கமான கடலிலே லோகம் அலைந்து நோவுபடப்புக்கவாறே. 'ஐயோ! நோவுபடாநின்றதே!' என்று அதுக்கு துக்கித்த பிராட்டிக்கு ப்ரியமாகத் தன் ஸங்கல்ப ஜ்ஞானத்தாலே ஸ்ருஷ்டித்து.

(ஒண்ணிறத்யாதி) தெளிந்து அழகியதாய்ச் சலிக்கின்ற கடலும். (வெற்பும்) பூமிக்கு ஆணியடித்தாற்போலே இருக்கும். (திருமாலித்யாதி) தாய்க்கு ப்ரியமாக ப்ரஜை களை நோக்குமித்தனையிறே. இத்தலை அறிந்தோ ஸ்ருஷ்டித் தது? விலக்காமையே உள்ளது. 61.

---

உரை:— பூம்யாதிகளான லோகங்களும், லோகங்க ளெல்லாம் காலமெல்லாம் அடங்கிக்கிற ஸம்ஹார காலமும், அழகிய நிறத்தையுடைத்தாய், அலையெறியா நின்றுள்ள ஸமுத்ரமான கடலும், பூமிக்கு ஆணியடித் தாற்போலிருக்கிற குலபர்வதங்களும், பின்னையும் லோகத்தி லுண்டான சிவந்த நிறத்தையுடைய தேஜஸ்பதார்த்தங்க ளும், வாயுவும், ஆகாசமும் இவையெல்லாம் பிராட்டிக்குக் பாக ஜகத்ஸ்ருஷ்டியிலே ஒருப்பட்ட ஸ்ரீயபதியுடைய ஸங்கல்பகல்பிதமான வகுப்பையுடையன. 61.

---

*தீயும்)* உலகிலேயுள்ள சிவந்த ஒளிப்பொருள்களும். *(மாருதமும்)* உலகினர் உயிர்வாழ உதவும் காற்றும். *(வானும்)* மற்ற அனைத்துக்கும் இடமளிக்கும் ஆகாயமும். இங்கு இவற்றைச் சொன்னது ப்ரக்ருதிகார்யமான மஹான், அஹங்காரம், தந்மாத்ரைகள், இந்த்ரியங்கள் முதலான மற்ற பொருள்களுக்கும் உபலக்ஷணம். *(திருமால் தன் புந்தியிலாய புணர்ப்பு)* பிராட்டியை உகப்பிப்பதற்காக உலகைப் படைப்பதில் ஈடுபட்ட லக்ஷ்மீநாதனின் ஸங்கல்பத்தாலுண்டான பிரிவுகளையுடைய ஸ்ருஷ்டி களாகும். ஜீவர்கள் அர்த்திக்காமலும், அபேக்ஷிக்காமலுமிருக்க, அவர்கள் தடுக்காமலிருப்பதையே பற்றாசாகக்கொண்டு அவர்களை ரக்ஷிக்கையாலே அவனே உபாயம் என்று கருத்து.

(திருமால் தன் புந்தியிலாய புணர்ப்பு) 'திருமால் தன்' என்று பிராட்டியோடு கூடிய ப,க,வானின் ஸ்ருஷ்டி கல்பனை என்கையாலே ஜக,த்ஸ்ருஷ்டி முதலானவற்றிலே பிராட்டிக்கும் ஒருவகையான அந்வயம் உண்டென்று உணர்த்தப்படுகிறது. 'திருமால்' என்று பிராட்டியை விசேஷணமாகவும் எம்பெருமானை விசேஷ்யமாகவும் நிர்த்தே,சிக்கையாலே இவளுடைய அந்வயம் அப்ரதா,நமானது என்றும், அவனுடையதே ப்ரதா,நமானது என்றும் காட்டப்படுகிறது. எல்லாவுலகையும் தனக்கு சரீரமாகவுடையவன் அவனேயாகையாலே, அவனுக்கே 'ப,ஹு ஸ்யாம்' [நான் பலவாகக் கடவேன்] என்கிற ஸங்கல்பமும், உலகிற்கு நிமித்தோபாதா,ந காரணமாயிருக்கும் தன்மையும் கூடும். இவளுக்கு அவை கூடா. ஜக,த்ஸ்ருஷ்டியில் அவனைத் தூண்டுவதும், ஸ்ருஷ்டி லீலாரஸத்தில் அவனோடு பங்குபெறுவதும் இவளுக்குள்ள அப்ரதா,நமான அந்வயங்கள். "*யதா, முக்தஸ்ய ப,க,வதா பரமஸாம்ய ஸ்ருதிஸ்ம்ருத்யாதி,ஸித்,தே,பி ஜக,த்,வ்யாபார வர்ஜமிதி லக்ஷணபூ,தைராகாரைர் வைஷம்யம் ஸ்தா,ப்யதே ததே,ஹாபி ப,வதி*" [முக்தன் பரமபுருஷனோடு பரமஸாம்யமுடையவனென்பது ஸ்ருதிஸ்ம்ருதி ஸித்,த,மாயினும், ஜக,த்வ்யாபாரம் தவிரவே பரமஸாம்யம் என்று பரப்,ரஹ்மலக்ஷண பூ,தமான ஆகாரங்களால் எப்படி வேறுபாடு ஸ்தா,பிக்கப்படுகிறதோ, அப்படியே பிராட்டி விஷயத்திலும் கொள்ள வேண்டும்.] என்று சது:ச்லோகீ இரண்டாம் ச்லோகபா,ஷ்யத்தில் அருளிச்செய்கையாலே தே,சிகருக்கும் இவ்விஷயத்தில் கருத்து வேற்றுமையில்லை. ஸகல பூர்வாசார்யர்களின் கருத்தும் இதுவேயாகும். இவ்வந்வயத்தை இல்லைசெய்வாரும் யாருமில்லை.

"ஈஷத் த்வத்கருணா நிரீக்ஷண ஸுதா,
ஸந்து,க்ஷணாத், ரக்ஷ்யதே
நஷ்டம் ப்ராக் தத,லாப,தஸ்
த்ரிபு,வநம் ஸம்ப்ரத்யநந்தோத,யம் ।
ச்ரேயோ ந ஹ்யரவிந்த,லோசந
மந:காந்தாப்ரஸாத,ாத்,ருதே
ஸம்ஸ்ருத்யக்ஷரவைஷ்ணவாத்,வஸு
ந்ருணாம் ஸம்பா,வ்யதே கர்ஹிசித் ||"

[ எந்தக் கடாக்ஷம் இல்லாமையாலே, முன் நசித்துக்கிடந்த தான மூவுலகமும், இப்போது நிறிதுபோது உன்னுடைய கருணை கடாக்ஷமாகிற அம்ருதவர்ஷத்தினால் அளவற்ற பெருமையை உடையதாகும்படி ரக்ஷிக்கப்படுகிறது. மனிதர்களுக்கு ஐச்வர்யம், கைவல்யம், பரமபத3ம் இவைகளில் மேன்மையானது தாமரைக்கண்ணனின் மனத்துக்கினியவளான ஸ்ரீதே3வியின் அருளில்லாமல் ஏற்படாதன்றோ.] என்று ஆளவந்தாரும்,

**ஸ்வஸ்தி ஸ்ரீர் தி3ஶதாத3ஶேஷஜக3தாம்**
**ஸர்க்கோ3பஸர்க்க3ஸ்தி2தீ:**
**ஸ்வர்க்க3ம் து3ர்க்க3திமாபவர்க்கி3கபத3ம்**
**ஸர்வம் ச குர்வந் ஹரி: ।**
**யஸ்யா வீக்ஷ்ய முக2ம் ததி3ங்கி3தபராதீ4நோ விதத்4த்தேऽகி2லம்**
**க்ரீடே3யம் க2லு நாந்யதா2ऽஸ்ய ரஸதா3**
**ஸ்யாதை3கரஸ்யாத் தயா ॥**

[எல்லாவுலகையும் படைத்தளித்து அழிப்பதையும், ஸ்வர்க்க, நரகமோக்ஷங்களைக் கொடுப்பதையும் செய்யும்போது ப4க3வான் எவளுடைய திருமுகமண்டலத்தைப் பார்த்துக்கொண்டு அதனுடைய இங்கி3தத்திற்கு வசப்பட்டவனாய் எல்லாக் காரியங்களையும் செய்கிறானோ, அந்தப்பிராட்டி (நமக்கு) மங்க3ளத்தை அளிக்கட்டும்; ப4க3வான் அவளுடன் ஒரே அபி4ப்ராயத்தை உடையவனாயிருக்கிறபடியால், அவளுடைய இங்கி3தபராதீ4னனாகக் காரியங்களைச் செய்யாவிடில் அக்காரியங்கள் ரஸத்தை அளிக்கமாட்டா.] என்று ஆழ்வானும்

**"யத்3ப்4ரூப4ங்கா3: ப்ரமாணம் ஸ்தி2ரசரரசநாதாரதம்யே**
**முராரே:"**

[எவளுடைய புருவநெறிப்புகள் ப4க3வானுடைய ஸ்தா2வரஜங்க3ம ஸ்ருஷ்டியிலுள்ள ஏற்றத்தாழ்வுகளுக்குக் காரணமோ...] என்றும்.

**"நம: ஸ்ரீரங்க3நாயக்யை யத்3ப்4ரூவிப்4ரமபே4த3த: ।**
**ஈஶேஶிதவ்ய வைஷம்ய நிம்நோந்நதமித3ம் ஜக3த் ॥"**

[எவனுடைய ப்ரூலதைகளின் வித்யாசத்தாலே இவ்வுலகம் நியமிப்பவர்களும், நியமிக்கப்படுபவர்களுமாகிற பே,த,த்திலுள்ள ஏற்றத்தாழ்வை உடையதாயிருக்கின்றதோ அப்படிப்பட்ட ஸ்ரீரங்க,நாயகிக்கு நமஸ்காரம்.] என்றும்,

**ஸ்ரீயை ஸமஸ்தசித,சித், விதா,நவ்யஸநம் ஹரே: |**
**அங்கீ,காரிபி,ராலோகைஸ் ஸார்த்த,யந்த்யை**
**க்ருதோऽஞ்ஜலி: ||**

[ஸகலசேதநாசேதனங்களையும் படைப்பதால் ப,க,வானுக்குண்டாகும் ச்ரமத்தைத் தன் அங்கீ,காரத்தைக் காட்டும் கடாக்ஷங்களாலே ஸப,லமாகச் செய்கின்ற பிராட்டியின் பொருட்டு அஞ்ஜலியானது (அடியேனால்) செய்யப்பட்டது.] என்றும்,

**உல்லாஸபல்லவிதபாலிதஸப்தலோகீ-**
**நிர்வாஹகோரகிதநேமகடாக்ஷலீலாம் |**
**ஸ்ரீரங்க,ஹர்ம்யதலமங்க,ளதீ,பரேகா,ம்**
**ஸ்ரீரங்க,ராஜமஹிஷீம் ஸ்ரியமாஸ்ரயாம: ||**

[ஏழுலகங்களையும் (ப,க,வான்) படைத்தவுடன் தளிர்விடுவதாகவும், (அவனாலே) ரக்ஷிக்கப்பட்ட ஏழு உலகங்களின் நிர்வாஹத்திலுள் மொட்டுவிடுவதாகவுமிருக்கின்ற அர்த்த,கடாக்ஷலீலையை உடையவளும் திருவரங்க மாளிகைக்கு (ஒரு) மங்கள தீபக்கொழுந்து போலிருப்பவளும், ஸ்ரீரங்க,நாத,னுடைய தி,வ்ய மஹிஷியானவளுமான ஸ்ரீதே,வியை ஆச்ரயிக்கிறோம்.] என்றும் ப,ட்டரும் ப,க,வானுடைய ஜக,த்,வ்யாபாராதி, ஸர்வகார்யங்களிலும் இவளுக்கு ப்ரேரகத்வ ரூபமான அந்வயம் உண்டென்று அருளிச்செய்தார்களன்றே. ஈண்டிடத்தில் ""இப்படி ஜக,த்காரணத்வத்தில் இவளுக்கு அந்வயமுண்டோ?" என்று ப்ரச்னம் பண்ணின நடாதூரம்மாளைக் குறித்துப் பிள்ளான் 'இவ்வர்த்த,த்தில் ஸந்தே,ஹமுண்டோ?' 'ஆவாப்,யாம் கர்மாணி கர்த்தவ்யானி ப்ரஜாச்ச உத்பாத,யிதவ்யா:' [நம்மிருவராலும் கர்மங்கள் செய்யப்பட வேண்டும். குழந்தைகளும் பிறப்பிக்கப்பட வேண்டும்.] என்று ப்ரமாணம் சொல்லுகையாலே ஸஹத,ர்ம சாரிணியான இவளுக்கு அந்வயமுண்டு" என்று அருளிச்செய்தார்" என்றும் ஐதிஹ்யம் அநுஸந்தி,க்கத்தக்கது. 61.

62. புணர்மருதி னூடுபோய்ப் பூங்குருந்தம் சாய்த்து
மணமருவ மால்விடையேழ் செற்று — கணம்வெருவ
ஏழுலகந் தாயனவு மெண்டிசையும் போயினவும்
சூழரவப் பொங்கணையான் றோள்.

**பதவுரை — புணர் மருதின்** — (ஒன்றோடொன்று) இடைவெளியின்றிச் சேர்ந்திருக்கிற இரு மருதமரங்களின், **ஊடு போய்** — நடுவே தவழ்ந்து சென்றும், **பூம் குருந்தம் சாய்த்து** — அழகிய குருந்தமரத்தைத் தள்ளியும், **மணம் மருவ** — (நப்பின்னைப் பிராட்டியை) மணம் புரிவதற்காக, **மால் விடை ஏழ் செற்று** — பெரிய எருதுகள் ஏழையும் கொன்றும், **கணம் வெருவ** — தேவாஸுரர்களெல்லாம் 'என்னாகிறதோ' என்று அஞ்சும்படியாக, **ஏழ் உலகம் தாயனவும்** — ஏழுலோகங்களையும் கடந்தவையும், **எண் திசையும் போயினவும்** — எட்டு திக்குகளிலும் வியாபித்தவையும், **சூழ் அரவ** — பாந்த திருவநந்தாழ்வானுடைய, **பொங்கு அணையான்** — விளங்கும் படுக்கையையுடையவனுடைய, **தோள்** — திருத்தோள்களாகும்.

**அவ:— அறுபத்திரண்டாம் பாட்டு.** (புணர்) **உத்பந்நமானபின் இவரதோ தம் கார்யத்துக்குக் கடவராயிருக்கிறது என்கிறது.**

---

**அவதாரிகை:—** இவற்றை உண்டாக்கித் தான் கடக்க விருக்கையன்றிக்கே, இவற்றைக் களைபிடுங்கி நோக்குவானும் அவனே யென்கிறார்.

---

62. *அவதாரிகை:*—இப்படி இவற்றை உண்டாக்கிவிட்டுத் தான் தூரத்திலிருக்கின்றானோ? இவைகளுடைய விரோதி, களை நீக்கி ரக்ஷிப்பவனும் இவனேயன்றோ என்கிறார்.

*உரை:*—(புணர் மருதின் ஊடுபோய்) இடைவெளியில்லாமல் ஒன்றோடொன்று ஒட்டிக்கிடக்கும் இரட்டை மருதமரங்களினிடையே இடைவெளிகண்டு அவற்றினிடையே போய் அவற்றை முறித்து நளகூபரர்களுக்கு சாபவிமோசனத்

**வ்யா:—** (புரிந்யாதி) ஒன்றென்னலாம்படி நிர்விவரமாயிருந்த மருதினிடை போய். (பூங்குருந்தம் சாய்த்து) த₃ர்ஶநீயமான குருந்தத்தைச் சாய்த்தும். (மணமித்யாதி) நப்பின்னைப்பிராட்டியுடைய பாணிக்₃ரஹண மங்க₃ளமானது தலைக்கட்டும்படிக்கீடாகப் பெரிய எருதுகள் ஏழையும் செற்று. (கணமித்யாதி) 65. "ஸத்₃:ஸுராணாம்" (ஸங்கை₃ஸ்ஸுராணாம்)

---

**உரை:—** இடைவெளியறப் பொருந்திநின்ற யமளார்ஜுனங்களின் நடுவே நடந்துக்கொண்டு தவழ்ந்துபோய் இலையும் கொம்பும் தெரியாதபடி பூத்துக்கிடந்த குருந்தத்தைத் தள்ளிப்போகட்டு, பிராட்டியைக் கைப்பிடிக்கையாகிற கல்யாணம் தலைக்கட்டுகைக்காகப் பெரிய வடிவையுடைய ருஷப₄ங்களேழையும் முடித்து. "ஸத்₃: ஸுராணாம்"

---

தையும், அவற்றிலே ஆவேசித்திருந்த அசுரர்களுக்கு அழிவையும் உண்டாக்கின விருத்தாந்தத்தைக் கூறுகிறார். "பொய்ம்மாய மருதான அசுரரைப் பொன்றுவித்து" [பெரியாழ்திரு 3-1-3] என்று பெரியாழ்வார் அருளிச்செய்கையாலே இவற்றில் அஸுராவேசமும் உண்டு. கலைவறுத்ததைக் காட்டும் பிரகரணமாகையாலே இவருக்கும் விவக்ஷிதமாயிருக்கத்தகும். (பூங்குருந்தம் சாய்த்து) இலையும் கொம்பும் தெரியாதபடி பூத்துக்கிடக்கும் குருந்தமரமாய் நின்றான் ஓரசுரன்—'பூக்களைக் கண்டு கண்ணன் மயங்கி நிற்கும்போது அவன்மேலே விழுந்து அவனை அழிப்போம்' என்னும் நினைவுடன். அம்மரத்தைச் சாய்த்து அவனை அழித்து அவனுடைய நினைவை அவனோடே போம்படி பண்ணிய செயலைச் சொல்லுகிறார். (மணம் மருவ மால் விடை ஏழ் செற்று) நப்பின்னைப் பிராட்டியை மணம் செய்வதற்காக, அவளுடைய தந்தையாலே வளர்க்கப்பட்டிருந்த அஸுராவேசமுள்ள பெரிய எருதுகள் ஏழையும் அழித்த காரியத்தைக் கூறுகிறார். (கணம் வெருவ ஏழுலகம் தாயனவும்)

ஸங்கை₃ஸ் ஸுராணாம் தி₃வி பூ₄தலஸ்தை₂ஸ்
ததா₂ மநுஷ்யைர் க₃க₃நே ச கே₂சரை: ।
ஸ்துத: க்ரமாத் ய: ப்ரசகார ஸர்வதா₂
மமாஸ்து மாங்க₃ல்யவிவ்ருத்₃த₄யே ஹரி: ॥ [விஷ்ணுதர்மம்]

வித்யாதி,) இப்படிப் படுக்கையில் கண்வளரப்பெறுதே அலமந்து திரிவதே! 66. "पाण्डरस्यातपत्रस्य छायायां जरितं मया" (பாண்டரஸ்யாதபத்ரஸ்ய ச்சாயாயாம் ஜரிதம் மயா) விஷ்ணுபோதத்திலிருக்க அவஸரம் பெற்றிலன், இக்காலத் திலேயிறே நிழலிலே முத்துக்குடையிடுவது. 62.

63. தோளவனை யல்லால் தொழாஎன் செவியிரண்டும்
கேளவன தின்மொழியே கேட்டிருக்கும் - நாநாளும்
கோணை கணையான் குரைகழலே கூறுவதே
நாணாமை நள்ளேன் நயம்.

பதவுரை:— தோள்—(என்னுடைய) கைகள், அவனை யல்லால் தொழா—அப்பெருமானைத் தவிர வேறொருவரையும் தொழமாட்டா; என் செவி இரண்டும்—என்னுடைய இரண்டு காதுகளும், கேள் அவனது—(எனக்கு எல்லா

யுடைய திருவனந்தாழ்வானுகிற ஓங்கிய திருப்படுக்கையிலே கண்வளர்ந்தருளின ஸர்வேச்வரனுடைய திருத்தோள்கள் கிடீர்! 'அந்தப் படுக்கையும் பொருத ஸௌகுமார்யத்தை யுடையவன்கிடீர் இச்செயல்களைச் செய்தான்! அப்படுக்கை யில் கண்வளரப்பெறுமல் இப்படி அலமந்து திரிவதே!' என்று வயிறுபிடிக்கிறுர். 62.

கள் நிக்ருகளில் வியாபித்ததைச் சொல்லுவதாகவுமாம். இவற்றையெல்லாம் செய்தது எதுவென்னில்: (அரவப் பொங் கணையான் தோள்) பரிசுத்தமும், மென்மை, குளிர்த்தி, நறுமணம் முதலான படுக்கையின் லக்ஷணங்களைப் பூர்ணமாகப் பெற்றவனும், பகவத்ஸம்பந்தத்தாலே ஓங்கிநிற்பவனுமான திருவனந்தாழ்வானுகிற திருப்படுக்கையிலே கண்வளர்ந்தருளின ஸர்வேச்வரனுடைய திருத்தோள்களன்றே இக்காரியங்கள் அனைத்தையும் செய்தன. அந்தப் படுக்கையும் உறுத்தும்படி யான மென்மையை உடையவனன்றே இம்முரட்டுச் செயல் களைச் செய்தான்! மென்மைக்குச்சேர அப்படுக்கையிலேயே கண்வளரப்பெறுமல் அடியார்க்காக இப்படிப் பாடுபட்டுத் திரிவதே! என்று வயிறெரிகிறுர். 62.

விதமான) உறவுமாயிருக்கும் அவனுடைய, **இன் மொழியே**—இனிய சொற்களையே, **கேட்டு இருக்கும்**—கேட்டு உயிர் தரித்திருக்கும்; **நா**—என்னுடைய நாக்கு, **நாளும்**—தினந்தோறும், **கோள் நாகணையான்**—ஒளிமிக்க ஆதிசேஷனைப் படுக்கையாக உடையவனுடைய, **குரை கழலே**—(ஆபரண ஒலியினால்) ஸப்தியாநிற்கும் திருவடிகளையே, **கூறுவதே**—சொல்லுவதாயிருக்கும்; **நயம்**—(ஸம்ஸாரிகள்) விரும்புமவையான விஷயங்களை, **நாணமை நள்ளேன்**—(நான்) வெட்கமில்லாமல் அணுகமாட்டேன்.

**அவ — அறுபத்துமூன்றும் பாட்டு. (தோள்) இப்படி அவன் ஸௌலபனென்று அநுஸந்தித்த பின்பு என்னுடைய இந்த்ரியங்கள் அவனையல்லது அறிகிறதில்லை.**

**வ்யா:— (தோளித்யாதி) நான் வேறேயொன்றைத் தொழச் சொன்னாலும் என் தோளானது அவனையல்லது தொழுகிறதில்லை. (என்செவியித்யாதி) என் செவிகள்,**

---

**அவதாரிகை:**— இப்படியிருக்கிற அவன் பக்கலிலே என்னுடைய ஸர்வேந்த்ரியங்களும் ப்ரவணமாய்த்து; நானும் ப்ரவணனானேன் என்கிறார்.

**உரை:**—என்னுடைய தோள்களானவை நான் 'வேறு சிலரைத் தொழு' என்னினும் அந்த ஸர்வேஶ்வரனையல்லது

---

63. *அவதாரிகை:*— 'இப்படியிருக்கிற அவனிடம் என்னுடைய எல்லா இந்திரியங்களும் ஈடுபட்டன; அதனாலே நானும் ஈடுபட்டேன்' என்கிறார். "மூடியானே" [திருவாய் 3-8] என்னும் திருவாய்மொழியில் நம்மாழ்வார்க்கு ஏற்பட்ட அநுபவம் இதுவேயாகும்.

*வ்யா:—(தோள் அவனையல்லால் தொழா)* என்னுடைய தோள்களானவை நான் 'வேறு சிலரைத் தொழு' என்றாலும் அந்த ஸர்வேஶ்வரனையல்லது தொழ மறுக்கின்றன. (என் செவி இரண்டும்...) என் இரண்டு காதுகளும் இயற்கை

ஆசைப்படப்படுவதான ஶப்தாதிகளை லஜ்ஜியாதே விட்டேன், ஹாஸ்யமான விஷயமென்றுமாம். அவன் ரஸிகனாகவுமாம், தவிரவுமாம்.

(தோளவளை) அவன்தான் தனக்குப் பகையென்னலாம்படி இருந்தாலும் என் செவிதானும் கேட்பது. ஆசைப்படும் விஷயங்கள். (நாணுமை கள்ளேன்) ஆண்பிள்ளைச் சோற்றுன்விலை ஆசைப்பட்டவனைப்போலே உணர்ந்தவனுக்கு லஜ்ஜிக்கவேணும். (கோள்) பிராட்டிக்கும் தனக்கும் கிடக்கைக்குண்டாகை. 63.

64. நயவேன் பிறர்பொருளை நள்ளேன் கீழாரோடு
உயவே னுயர்ந்தவரோ டல்லால்—வியவேன்
திருமாலை யல்லது தெய்வமென் றேத்தேன்
வருமாறென் னென்மேல் வினை.

---

நாட்டார் விரும்பி மேல்விழுகிற விஷயங்களை அவர்களில் வ்யாவ்ருத்தனான நான் நிர்லஜ்ஜனாய்க்கொண்டு செறியேன். ஸ்வரூபஜ்ஞானம் பிறந்த பின்பு லஜ்ஜித்து மீளவேண்டும்படி காணும் விஷயப்ராவண்யத்தின் பொல்லாங்கிருப்பது. 63.

---

(குரை கழல்) ஒலிக்கும் வீரக்கழல் முதலான ஆபரணங்களை அணிந்த திருவடி. நாட்டிலுள்ள மற்றவர்கள் ஈடுபடும் இதர விஷயங்களை விட்டு. இப்படி நீர் ஸர்வேந்திரியங்களாலும் பகவத்விஷயத்தையே பற்றியிருப்பதே! என்று ஸம்ஸாரிகளுக்குக் கருத்தாகக்கொண்டு கூறுகிறார்; (*நயம் நாணுமை கள்ளேன்*) நயம்—(*பிறரால்*) விரும்பப்படுவது. ஸம்ஸாரிகளால் விரும்பப்படுவது. ஸம்ஸாரிகளால் விரும்பப்படும் சப்தஸ்பர்ச ரூபரஸகந்தங்களாகிற ப்ராக்ருதவிஷயங்களை நான் லஜ்ஜையில்லாமல் அனுகமாட்டேன். (*நாணுமை*) ஸ்வரூபஜ்ஞானம் பிறந்த பின்பு வெட்கத்தோடு மீளவேண்டும்படியன்றோ ப்ராக்ருதவிஷயங்களின் நிலைமை உள்ளது. "ஆண்பிள்ளைச் சோற்றுன்விலை (*பெண்வேடம் பூண்ட ஆண்பிள்ளை*) ஆசைப்பட்டவனைப்போலே, உணர்ந்தவனுக்கு லஜ்ஜிக்கவேணும்" என்பர் பெரியவாச்சான்பிள்ளை. 63.

**பதவுரை:— பிறர் பொருளை** — விலக்ஷணனான எம்பெருமானுடைய உடைமையான ஆத்மவஸ்துவை, **நயவேன்** — (எனக்கென்று) ஆசைப்படமாட்டேன்; **கீழாரோடு** — (ஆத்மாவைத் தம்முடையதாக நினைத்திருக்கும்) ஸம்ஸாரிகளோடு **நன்னேன்** — நெருங்கமாட்டேன்; **உயர்ந்தவரோடல்லால் உயவேன்** — (எம்பிரானுக்கு அடிமைப்பட்டிருக்கையாலே) உயர்ந்திருப்பவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களைத் தவிர வேறு மனிதரிடம் பேசமாட்டேன்; **திருமாலை அல்லது** லக்ஷ்மீநாதனைத் தவிர வேறு சிலரை, **தெய்வம் என்று ஏததேன்** - தேவதை என்று துதிக்கமாட்டேன்; **வியவேன்** — (அவர்களைக் கண்டு) வியக்கவுமாட்டேன்; **என் மேல்** — (இப்படிப்பட்ட) என் மேல், **வினை வரும் ஆறு என்** — பாபம் வரும் வழி எப்படி?

**அவ:— அறுபத்துநாலாம் பாட்டு.** (நயவேன்) **ப்ராப்தத்தைச் செய்து அப்ராப்தத்தைச் செய்யேனென்றிருக்கிற என்பக்கல் பாபத்துக்கு வரப்போமோ ? என்கிறார்.**

---

**அவதாரிகை:—** உமக்கும் உம்முடைய கரணங்களுக்கும் பகவத்விஷயத்திலே இதரவிஷயங்களைக் கடைக்கணியாதபடி ப்ராவண்யம் உண்டேயாகிலும் துர்வாஸனையாலே அவை வந்து மேலிடில் செய்வதென் ? என்ன,— நான் நின்ற நிலை இதுவானபின்பு எங்ஙனே அவை வந்து மேலிடும்படி ? என்கிறார்.

---

64. ***அவதாரிகை:***— 'உமக்கும் உம்முடைய இந்திரியங்களுக்கும் மற்ற விஷயங்களில் பற்று சிறிதுமில்லாதபடி பகவத்விஷயத்தில் ஈடுபாடு மிக்கிருந்தாலும், அநாதிவாஸனையாலே மற்ற விஷயங்கள் உம்மையும் உம்முடைய இந்திரியங்களையும் வெற்றிகொண்டு விட்டால் என்செய்வீர்' என்று ஸம்ஸாரிகள் கேட்க, 'நான் நின்ற நிலை இதுவானபின்பு எப்படி அவை வந்து மேலிடும் ?' என்கிறார்.

***வ்யா:***— (*நயவேன் பிறர்பொருளை*) பிறர்பொருளை விரும்பமாட்டேன். சாஸ்த்ரங்களில் நிஷேதிக்கப்படும் ஸாதாரண

வ்யா:- (கயவேன் பிறர் பொருளை) பிறர்பொருளை ஆசைப்படேன். த்₃ரவ்யத்துக்கு உத்கர்ஷமாவது:- த்₃ரவ்யந் தன்னுடைய நன்மையாலும், உடையவனுடைய நன்மையாலும்; த்₃ரவ்யம் பரிணாமியான அசித்தன்றிக்கே ஆத்ம த்₃ரவ்யமாயிருந்தது; 68. "யஸ்யாத்மா ஶரீரं" (யஸ்யாத்மா ஶரீரம்), 8. "பதிं விஶ்வஸ்ய" (பதிம் விஶ்வஸ்ய) என்று ஓதப்படுகிறவன் உடையவன். உத்க்ருஷ்டமான ஆத்மாவை "என்னது"

---

உரை:— "उत्तमः पुरुषस्त्वन्यः" (உத்தம: புருஷஸ்த்வந்ய:) என்கிறபடியே ஸர்வவிஜாதீயனான ஸர்வேஶ்வரனுடைய ஆத்மத்₃ரவ்யத்தை என்னதென்று விரும்பேன். பிறரதான ஆத்மாவை என்னது என்றிருக்கும் தாழ்ந்த ஸம்ஸாரிகளோடு சேறியேன். உத்துங்க₃மான ஆத்மவஸ்து

---

மான திருட்டு தன்னிடமில்லை என்று ஆழ்வார் பெருமையாகக் கூறிக்கொள்ள ப்ரஸக்தியேயில்லை. திருட்டுகளில் மிகக்கொடிய திருட்டு தன்னிடமில்லை என்பதே ஆழ்வாருடைய கருத்து. திருடப்படும் பொருளைவிட்டும், திருடப்படுகிறவனைவிட்டும் திருட்டில் ஏற்றத்தாழ்வுண்டு. அழியக்கூடிய அசேதனப் பொருள்களைக் காட்டிலும், அழியாததான ஆத்மவஸ்து மிக வுயர்ந்தது. ஸர்வேஶ்வரன் அனைவரிலும் உயர்ந்தவன். அவனுக்கு ஸ்ரீகௌஸ்துப₄ம்போலே இனியதான ஆத்மவஸ்துவைத் திருடுவதே மிகக்கொடிய திருட்டாகும். அதாவது – அவனுடையதான ஆத்மாவைத் தன்னுடையதென நினைக்கை.

யோ ऽந்யதா₂ ஸந்தமாத்மாநமந்யதா₂ ப்ரதிபத்₃யதே।
கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா॥

[பகவானுடைய உடைமையாயிருக்கும் ஆத்மாவை, எவனொருவன் தனக்குச் சொந்தமாக நினைக்கிறானோ, ஆத்மாவை அபஹரிப்பவனான அந்தத் திருடனால் செய்யப்படாத பாபம் எது?] என்கிறபடியே இதையே மிகக்கொடிய பாபமாக ஶாஸ்திரமும் சொல்கிற்று. ராவணன் செய்ததையொத்த இத் திருட்டு தன்னிடமில்லை என்கிறார். (பிறர்) "உத்தம: புருஷஸ்த்வந்ய:" [கீ₃தை 15-17] [பரமபுருஷன் மற்ற புருஷர்களிலும்

என்றிரேன். (கள்ளேன் கீழாரோடு) ஆத்மாவை "என்னது" என்றிருக்குமவர்களாயிற்று கீழாராகிறார். அவர்களோடே கிட்டேன். தமகன்படியாக்கிக்கொள்வரென்று. (உய்யவேன் உயர்ந்தவரோடல்லால்) உத்தமரென்னுமவர்களோடல்லது உசாவேன். (வியவேன் திருமாலையல்லது) ஸ்ரிய:பதியைக் கண்டல்லது விஸ்மயப்படேன். (தெய்வமென்றேத்தேன்) அவனையல்லது வேறு சிலரை தெய்வமென்று ஸ்துதியேன். (வியவேன் திருமாலை) ஸ்ரிய:பதியினுடைய ஐஶ்வர்யத்தை அர்த்தவாதமென்றிரேன். (வருமாறென் என்மேல்வினை) 69. "अवश्यमनुभोक्तव्यं" (அவஶ்யமநுபோக்தவ்யம்) என்கிற வசநத்தைக்கொண்டு என்பக்கலிலே வரப்போமோ பாபத்துக்கு? என்கிறார்.

---

ஸர்வோத்தமனை ஸர்வேஶ்வரனுடையது என்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களையொழிய ஏதேனுமொன்றை உசாவேன். ஸர்வாதிகனை ஸ்ரிய:பதியையொழியப் புறம்பே சிலரை ஆஶ்ரயணீய தேவதைகளென்று புத்தி பண்ணி வாய்விட்டுப் புகழேன். இவ்வாகாரங்கள் நமக்கு உள

---

வேறுபட்டவன்] என்றதை அடியொற்றிப் பரமபுருஷனைப் 'பிறர்' என்கிறார். (கள்ளேன் கீழாரோடு) பரமபுருஷனுடைய ஆத்மவஸ்துவைத் தம்முடையதாக நினைத்திருக்கும் தாழ்ந்தவர்களோடு சேரமாட்டேன். (உய்யவேன் உயர்ந்தவரோடல்லால்) பரமபுருஷனுக்கு ஸ்ரீகௌஸ்துபம்போலே இனிய ஆத்மவஸ்துவைத் தம்மதாக நினையாமல் ஸர்வோத்தமனான அவனுடையதாக நினைத்திருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களைத் தவிர வேறெவரிடமும் பேச்சுவார்த்தைகள் வைத்துக்கொள்வதில்லை. (திருமாலையல்லது தெய்வமென்றேத்தேன்) திருவுடைய தேவனாகையாலே புருஷோத்தமனான அவனைத்தவிர மற்றொரு திருவில்லாத் தெய்வத்தை அடையத்தக்க தெய்வமென்றெண்ணி, வாய்விட்டுத் துதிக்கமாட்டேன். (இவ்வாழ்வாரைச் சமரசவாதியென்று சிலர் கூறுகிறார்களே, அவர்கள் அறிவிலிகளாகவாவது வஞ்சகர்களாகவாவது இருக்கவேண்டும்.)

(வியவேன்) வாக்யார்த்த₂ம்:— க்ருதக்ருத்யனென்கிறார். எம்பெருமான் விரும்பும் ஆத்மாவை அபஹரியேன். ராவணன் செயலைச்செய்யேன். கீழோர் - அவனுக்குக் கூட்டுப்படும் மாரீச ப்ரப்₄ருதிகள். உயர்ந்தவர் - விஶ்வாமித்ராதி₃கள். 70. "महात्मानस्तु" (மஹாத்மாநஸ்து) "பெரியோர்" (வியவேன்) 71. "तृणीकृतविरिञ्चादिनिरङ्कुशविभूतयः" (த்ருணீக்ருத விரிஞ்சாதி₃நிரங்குஶ விபூ₄தய:) ப்₃ரஹ்மாதி₃களைக் கண்டால் அடுப்படைக்கல்லாக நினைத்திருக்குமதனை. (திருமாலை யல்லது வியவேன் - தெய்வமென் றேத்தேன் - வருமாறென் னென்மேல் வினை) 69. "अवश्यमनुभोक्तव्यं" (அவஶ்யமநுபோ₄க்தவ்யம்) என்கிறவை என்னை நலியவோ? 64.

65. வினையா லடர்ப்படார் வெந்நரகில் சேரார்
தினையேனும் தீக்கதிக்கண் செல்லார் - நினைதற்
கரியானைச் சேயானை ஆயிரம்பேர்ச் செங்கட்
கரியானைக் கைதொழுதக் கால்.

---

டாய்த்தே என்று ஆச்சர்யப்படேன். இப்படியானபின்பு ப₄க₃வத₃நுக்₃ரஹபாத்ரரான நம்முடைய மேலே நிக்₃ரஹ ரூபமான பாபம் வந்து மேலிடும்படி எங்ஙனே? திருமாலை யல்லது வியவேன்; அவனையல்லது தை₃வமென்றேத்தேன் என்னவுமாம். 64.

---

(வியவேன்) அவனைப் பற்றியவர்க்கு இவை தாமே வருமாகை யாலே, "இப்பெருமைகள் நமக்கு எப்படி வந்தன" என்று ஆச்சரியப்படமாட்டேன். *(வியவேன் திருமாலை)* 'திருமாலுக்குச் சொல்லப்படும் பெருமைகள் வெறும் புகழ்ச்சி என நினையேன்' என்றும் கொள்ளலாம். *(வியவேன் திருமாலையல்லது.........)* "திருமாலைத் தவிர வேறொருவரின் ஸ்வரூபரூபகு₃ணவிபூ₄தி சேஷ்டிதங்களைக் கண்டு ஆச்சர்யப்படமாட்டேன்; அவனைத் தவிர வேறொருவரை தெய்வமாகத் துதிக்கமாட்டேன்" என்றும் கொள்ளலாம். *(வருமாறென் எனமேல்வினை)* இப்படியிருக்கும் போது ப₄க₃வானுடைய அநுக்₃ரஹத்திற்கு இலக்கான என் மேல், அவனுடைய நிக்₃ரஹரூபமான பாபங்களும், அதுகாரணமாக வரும் விஷயாநுப₄வமும் எப்படி வந்து வெற்றி கொள்ள முடியும்? 64.

**பதவுரை:— நினைதற்கு அரியானை —** தம் முயற்சியாலே அறியமுடியாதவனும், **சேயானை -** வெகுதூரத்திலிருப்பவனும், **ஆயிரம் பேர் செம் கண் கரியானை —** ஆயிரம் திருநாமங்களையும், சிவந்த திருக்கண்களையும், கறுத்த திருமேனியையும் கொண்டவனுமான எம்பிரானை, **கைதொழுதக்கால் —** கையாலே வணங்கினால், **வினையால் அடர்ப்படார் —** கர்மங்களால் துன்புறுத்தப்படார்கள்; **வெம் நரகில் சேரார் —** கொடிய நரகத்தில் சேரார், **தினையேனும் —** சிறிதாவது, **தீ கதிக்கண் செல்லார் —** கெட்ட கதிகளுக்குப் போக மாட்டார்கள்.

**வ்யா:— அறுபத்தைந்தாம் பாட்டு.** (வினையித்யாதி$_3$) **பாபத்தால் அடக்கப்படார்.** (வெந்நரகில் சேரார்) **பாப ப$_3$லமான நரகிலும் சேரார்.** (தினையித்யாதி$_3$) **த$_4$ர்மபுத்ரன் நரகத$_3$ர்சநம் பண்ணினவோபாதியும் கூடாது இவர்களுக்கு.** (நினைதற்கரியானை) **ஸ்வயத்நத்தாலே அறியப் போகாதவனை.** (சேயானை) **அதுக்கடி தூ$_3$ரஸ்த$_2$னுகை.**

---

**அவதாரிகை:—** இது எனக்கு ஒருவனுக்குமேயன்று; அவனை ஆஸ்ரயித்தார்க்கெல்லாம் ஒக்குங்கிடீர் என்கிறார்.

**உரை:—** ஸ்வயத்நத்தால் அளவிட்டு நினைக்கைக்கு மிகவும் அரியனாய், மநோரத$_2$பத$_2$த்துக்கு எட்டாதபடி அதிதூ$_3$ரஸ்த$_2$னுமாய், தன்னருளாலே அறிந்து அநுப$_4$விக்க

---

65. ***அவதாரிகை:—*** **மூன் பாசுரத்திற்சொன்ன பெருமை எனக்கு ஒருவனுக்கு மாத்திரமன்று. அவனை அடைந்தார் அனைவர்க்கும் உள்ளதொன்று கிடீர் என்கிறார்.**

*வ்யா:— (நினைதற்கு அரியானை)* **"யாரும் ஓர் நிலைமையன்** என அறிவரிய எம்பெருமான்" [திருவாய் 1-8-4] என்கிறபடியே எத்தனையேனும் விலக்ஷண அறிவையுடையவர்களுக்கும் தம் முயற்சியாலே அறிய அரியவனை. **இதற்குக் காரணம் சொல்லு**கிறது மேலே.—*(சேயானை)* **மனக்குதிரைக்கும் சென்றுகிட்ட**

(ஆயிரமித்யாச,) தான் கொடுத்த அறிவை உடையவர்களுக்கு ஏத்துகைக்கு ஆயிரம் திருநாமத்தையும், கண்டு அநுப,விக்கைக்கு ஶ்ரமஹரமான வடிவையுமுடையவனை. (கைதொழுதக்கால்) அஞ்ஜலி பண்ணினால்.

(வினையாலடர்ப்படார்) என்னைப்போலே விதே,யகரண மின்றியே பாவநமென்று ஆஶ்ரயித்தார்க்குப் பாபம் போம். (வினை) இங்கு அநுப,விக்கும் பாபப,லம் அநுப,வியார். (வெந்நரகு) போய் அநுப,விக்கும் பாபப,லம். (தினை) அலத்யாப,ாவ,தாலே. (வினை தக்கரியானை) ஸ்வயத்நத்தாலே

---

இழிந்தார்க்கு இழிந்தவிடமெங்கும் துறையாம்படி கு,ண சேஷ்டிதங்களுக்கு வாசகமான ஆயிரம் திருநாமங்களையுடையனாய், வாத்ஸல்யஸூசகமாய்ச் சிவந்த திருக்கண்களையும், அதுக்குப் பகைத்தொடையான கறுத்த வடிவையுமுடையனான ஸர்வேஶ்வரனை, அஞ்ஜலிப்ரணாமாத்யநுவர்த்தனங்களைப் பண்ணி ஆஶ்ரயித்தால் புண்யபாபரூபகர்மங்

---

முடியாதபடி மிகவும் தூரத்திலிருப்பவனை. (ஆயிரம்பேர்) "மயர்வற மதிநலமருளினன்" என்கிறபடியே அவனுடைய அருளாலே அவனை அநுப,விக்க இழிந்தவர்களுக்கு, இறங்கின விடமெல்லாம் அநுப,விக்கும் துறையாம்படி கு,ணச்செயல்களைச் சொல்லும் ஆயிரம் பெயர்களை உடையவனை. (ஆயிரம் பேர்)வாய்க்கினியவிருந்து. (செங்கட் கரியானை) கண்ணுக்கினிய விருந்து- வாத்ஸல்யத்தைக் கோட்சொல்லித்தரும் சிவந்த திருக்கண்களையும், அதுக்கு நிறச்சேர்த்தியழகைத்தரும் கரிய திருமேனியையும் உடைய ஸர்வேஶ்வரனை. (கைதொழுதக்கால்) கைகூப்புவது, வணங்குவது முதலான ஸேவைக்ருத்திகளைப் பண்ணி ஆஶ்ரயித்தால். (வினையால் அடர்ப்படார்) புண்யபாபரூபமான பாபங்களாலே துன்பப்படமாட்டார்கள். (வெங்கரகில் சேரார்) அந்தப் புண்யபாபங்களுக்குப் ப,லமான ஸம்ஸாரமாகிற கொடிய நரகிலும் சேரார். (வினையால் அடர்ப்படார் வெங்கரகில் சேரார்) பாபபலன்களை இவ்வுலகில் அநுபவியார்; கொடியநரகில் சென்றும் பாபபலன்களை அநுபவியார்;

நினைப்பார்க்கு அரியானை. (சேயானை) இவன் குற்றமன்று. வஸ்துஸ்வபாவம். (ஆயிரமித்யாதி) தானே காட்டு வார்க்கு இழிந்தவிடமெல்லாம் துறையாகை. (வாகதொழுதக் கால்) பாலைக்குடிக்க நோய் போம். வருத்தது செய்ய அமையும். 65.

66. காலை யெழுந்துலகம் கற்பனவும் கற்றுணர்ந்த
மேலைத் தலைமறையோர் வேட்பனவும்— வேலைக்கண்
ஓராழி யானடியே யோதுவது மோர்ப்பனவும்
பேராழி கொண்டான் பெயர்.

**பதவுரை:— காலை எழுந்து**—(ஸத்வகுணத்தை வளரச் செய்வதான) காலை வேளையில் கண் விழித்து எழுந்து, **உலகம்**—உயர்ந்தோரான முமுக்ஷுக்கள், **கற்பனவும்**—அப்யாஸம் செய்பவையும், **கற்று உணர்ந்த மேலை தலைமறையோர்**—படித்து அறிந்தவர்களான வைதிகஸ்ரேஷ்டர்கள், **வேட்பனவும்**—காண ஆசைப்படுபவையும், **வேலைக்கண்**—திருப்பாற்கடலினுள், **ஓர் ஆழியான் அடியே**—ஒப்பற்ற திருவாழியைக் கைக்கொண்டு கண்வளர்ந்தருளும் எம்பிரானது அடிகளே; **ஓதுவதும்**—(இப்பெரியோர்கள்) கேட்பவையும், **ஓர்ப்பனவும்**—நினைப்பவையும், **பேர் ஆழி கொண்டான் பெயர்**—பெரிய சக்கரத்தைக் கொண்டவனுடைய திருநாமங்களே.

---

களாலே நெருக்குப்படார்; அதுக்குப் பலமாக வரக்கடவதாய், அதிக்ரூரமான ஸம்ஸாரமாகிற நரகத்திலே சென்று கிட்டார். ஏகதேசமும் துர்மார்க்கங்களில் போகார். 65.

---

"ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" [கீதை 18-66] என்னுமவன் 'பொறுத்தேன்' என்னப் பாபங்கள் நீருகையாலே. (தீயேனும் தீக்கதிக்கண் செல்லார்) புண்யபாபங்களுக்குக் காரணமான தீயவழிகளில் ஒரு நாளும் செல்லமாட்டார்கள். தர்மபுத்ரன் நரகத்தைப் பார்த்ததுபோலும் இவர்களுக்குச் சிறிதேனும் நரகாதி, துர்மார்க்கஸம்பந்தம் கூடாது என்றுமாம். 65.

வ்யா:— அறுபத்தாறும் பாட்டு. (காலையெழுந்து) ஸத்வோத்தரமான காலத்திலே எழுந்திருந்து. (உலகம்) மோக்ஷேச்சையுடையவர்கள் கற்பனவும். (கற்றுணர்ந்த இத்யாதி) அறிவு தலைக்கட்டினவர்கள் பாவநாப்ரகர்ஷத்

---

அவதாரிகை:— அறிவுடையராயிருப்பார்களாகில் பஜனீயன் அவனே கிடீர்! என்கிறார்.

உரை:— "கிளரொளியிளமை" என்கிறபடியே பஜனாநுரூபமான கரணபாடவமுள்ள பால்யாவஸ்தையிலே ஆஶ்ரயணோந்முகராய்க்கொண்டு கிளர்ந்து லோகமடங்க அப்யஸிக்குமவையும், ஜ்ஞாதவ்யார்த்தங்களை ஓராசார்யன் பக்கலிலே கேட்டு அவற்றை அலகலகாக அறிந்திருப்பார்களாய் அத்தால் வந்த மிக்க உயர்த்தியை உடையரான பரமவைதிகரடங்கலும் அறிவின் பலமாக ஸாக்ஷாத்

---

66. அவதாரிகை:— அவனை அடைந்தவர் இடர்ப்படார் என்றார் சென்றபாட்டில்; அறிவுடையவர்களாயிருந்தால் அவனை அடையாதிருக்கமுடியுமோ? என்கிறார் இப்பாட்டில்.

வ்யா:— *(காலை எழுந்து உலகம் கற்பனவும்)* அனைவர்க்கும் ஸத்வகுணம் விஞ்சியிருக்கும் காலைவேளையில் எழுந்திருந்து உயர்ந்தோர் கற்கின்றனவும். "உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே" என்கிறபடியே 'உலகம்' என்னும் சொல் உயர்ந்தோரான முமுக்ஷுக்களைக் குறிக்கிறது. 'காலை' என்று ஆயுளுக்கு ஆரம்பநிலையாகிற இளமையைக் குறிப்பதாய். "கிளரொளியிளமை கெடுவதன் முன்னம்" [திருவாய் 2-10-1] என்கிறபடியே அவனை நினைக்கத்தக்கபடி ஐம்புலன்களும் வலிமையோடிருக்கும் இளமையிலே அவனை அடைய விரும்பிக் கிளர்ந்து உலகமெல்லாம் (உயர்ந்தோரனைவரும்) கற்கின்றவையும். *(கற்றுணர்ந்த மேலைத்தலைமறையோர் வேட்பனவும்)* அறிய வேண்டிய விஷயங்களையெல்லாம் ஓராசார்யனிடம் கேட்டு அவற்றை அலகி அலகி ஆராய்ந்து அறிந்திருப்பவர்களாய், அதனால் உண்டான மிகுந்த சிறப்பையுடையவர்களான பரம வைதிகர்களனைவரும் அறிவின் பலனாகக்காணவிரும்புகின்ற

**தர்லே ஸாக்ஷாத்கரிப்பனவும்.** (வேலையித்யாதி,) **இவற்றி னுடைய ரக்ஷணத்துக்காகத் திருப்பாற்கடலிலே கையும் திருவாழியுமாய்க் கிடக்கிற ஸர்வேச்வரனுடைய திருவடி களையே.** (பேராழி கொண்டான் பெயரே ஓதுவதும் ஓர்ப் பனவும்) **ஸர்வேச்வரனுடைய திருநாமங்களே இவர்களுடைய ச்ரவணத்துக்கும் ஆநந்த,த்துக்கும் விஷயமாவது.**

(காலை) **ஸத்வோத்தரமான காலம்.** (வேலைக்கண் ஓராழியானடியே) **கரையையுடைத்தாய், ஒப்பில்லாத கடல்.** (பேராழி கொண்டான்) **இவர்களை ரக்ஷிக்கைக்கு உருவின பத்திரமும் தாலுமாயிருக்கை. "கைகழலாநேமியான்" 66.**

---

கரிக்க ஆசைப்படுவனவும், கரையோடே கூடி இடமுடைத் தாய், அத்,விதீயமான கடலிலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வேச்வரன் திருவடிகளே. அதுக்கு ஸாத,நமாக ச்ர வணம் பண்ணுவதும் மனனம் பண்ணுவதும் ரக்ஷணபரி கரமான பெரிய திருவாழியையுடையனான ஸர்வேச்வர னுடைய கு,ணசேஷ்டிதாதி,களுக்கு வாசகமான திரு நாமங்கள். பேராழிகொண்டான் — பெரியகடல்போலே ச்ரமஹரமான வடிவை எடுத்துக்கொண்டிருக்கிறவன் என்னவுமாம். அப்போது 'ஓராழியான்' என்றது அத்,விதீய மான திருவாழியை உடையவனென்று கொள்வது. 66.

---

வையும். *(வேலைக்கண் ஓராழியானடியே)* கரையோடே கூடிய தாய், பெரிதான இடமுடையதாய், ஒப்பற்றதாயிருக்கும் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வேச்வரனுடைய திருவடிகளே இப்பெருமைகளை உடையவை. வேலை—கரை. கண்—இடமுடைமை. அன்றிக்கே, வேலை என்று திருப்பாற் கடலைக் குறிப்பதாய், திருப்பாற்கடலிலே ஒப்பற்ற திருவாழியை ஏந்திநிற்பவனுடைய திருவடிகளே என்றுமாம். *(ஓதுவதும் ஓர்ப்பனவும் பேராழிகொண்டான் பெயர்)* அவ்வடியை அடைவதற்கு ஸாத,நமாகக் கேட்பதும் மனனம் செய்வதும், அடியார்களை ரக்ஷிப்பதற்குறுப்பாகப் பெரிய திருச்சக்கரத்தை ஏந்திநிற்பவனுடைய பெயர்களேயாகும். *(பெயர்)* அவனுடைய

67. பெயருங் கருங்கடலே நோக்குமாறு ஒண்பூ
உயருங் கதிரவனே நோக்கும்—உயிரும்
தருமனையே நோக்குமொண் தாமரையாள் கேள்வன்
ஒருவனையே நோக்கு முணர்வு.

**பதவுரை:— ஆறு**—நதியானது, **பெயரும் கரும் கடலே நோக்கும்** — அலைபெறிகின்ற கறுத்த கடலையே நோக்கிச் செல்லும்; **ஒண்பூ**—ஒளிபொருந்திய தாமரைப்பூ, **உயரும் கதிரவனே நோக்கும்** — மிக உயர்ந்த இடத்திலேயிருக்கும் ஸூர்யனைக்கண்டே மலரும்; **உயிரும்**—(அவைஷ்ணவர்களுடைய) ஆத்மாக்கள், **தருமனையே நோக்கும்**—(ஆயுள் முடிவில்) யமதர்மராஜனையே அடையும்; (அப்படியே), **உணர்வு**—ஞானமானது. **ஒண் தாமரையாள் கேள்வன் ஒருவனையே**—ஒளிபொருந்திய தாமரையில் வஸிக்கும்லக்ஷ்மியின் நாதனாகிய நாராயணனை மட்டுமே, **நோக்கும்**—அறியும்.

**அவ:— அறுபத்தேழாம் பாட்டு.** (பெயரும்) **மோக்ஷேச்சையுடையவர்களுக்கும் அறிவு தலைநின்றவர்களுக்கும், அவனுடைய திருவடிகளை ஏத்துவது, அவனுடைய திருநாமங்களையே ஏத்துவது என்று சொல்லிற்று. ஜ்ஞானத்துக்கு அவனே விஷயமாகையாலே என்கிறது.**

---

**அவதாரிகை:—** இப்படி அறிவில் தலைநின்றவர்கள் அவனை ஆசைப்படுகைக்கடி அறிவுக்கு க்ருத்யபூமி ஸ்ரிய:பதியல்லதில்லாமையாலே என்கிறார்.

---

குணங்களையும் செயல்களையும் காட்டும் பெயர்கள். 'ஓராழியான்' என்றதை சக்ரதாரி என்று கொள்ளும்போது, 'பேராழி கொண்டான்' என்றதை, பெரிய கடல்போலே, கண்டாரிகளைப் பையாற்றும் வடிவை எடுத்துக்கொண்டிருக்கிறவன் என்று பொருள்கொள்வது. 66.

67. *அவதாரிகை:—* இப்படி அறிவிற்சிறந்தவர்களனைவரும் அவனை ஆசைப்படுவதற்குக் காரணம், அறிவுக்குப் போக்கிடம் திருமாலையல்லது வேறொரு தத்துவமில்லாமையாலே என்கிறார்.

**வ்யா:—** (பெயருமித்யாதி2) **ஆறானது. பூர்ணமாய்ச் சலியாநின்ற கடலையே நோக்காநின்றது. ஆறு கடலை நிறைக்கைக்கன்று புகுகிறது; புக்கல்லது தான் த4ரிக்க மாட்டாமை. தாமரைப் பூவானது. தூ3ரஸ்த2னுகிலும் ஆதி3த்யனுக்கு அலருமத்தனை; அக்3ந்யாதி3களுக்கு அலராது.** (உயிரும் தருமனையே நோக்கும்) **யமனைக் கிட்டியல்லது வேறோரிடத்தில் புகவொண்ணாது.** (ஒண்தாமரை

---

**உரை:—** காற்றுவளத்திலே கொந்தளித்துக் கிளரக் கடவதாய், பரப்பையுடைத்தான கடலை ஆறானது நோக்கா நிற்கும். அழகிய தாமரைப்பூவானது உச்சஸ்த2லவர்த்தியான ஆதி3த்யனையே நோக்காநிற்கும், ப4க3வத்பரரல்லாத நாட்டில் ப்ராணிகளடங்கலும் ஶரீரவிஶ்லேஷாநந்தரத்தில் த4ர்மராஜனான யமனையே சென்று கிட்டாநிற்கும். இவை

---

**வ்யா:—** *(பெயரும் கருங்கடலே நோக்கும் ஆறு)* காற்றடிக்கும் திசையிலே அலையெறிவதாய், கறுத்திருப்பதாய், பரப்பையுடையதான கடலை நோக்கியே செல்லாநிற்கும் ஆறு. ஆறு கடலை நிறைப்பதற்காகப் புகவில்லை; புகுந்தல்லது நிற்க மாட்டாமையாலே கடலுடன் கலக்கிறது. இவ்வாறே அறிவும் கடல்வண்ணனான திருமாலையடைந்தல்லது நிற்கமாட்டாது என்கை. *(ஒண் பூ உயரும் கதிரவனே நோக்கும்)* அழகிய தாமரைப் பூவானது உயரவிருக்கும் சூரியனின் வரவையே பார்த்திருந்து அவனுக்கே மலருமேயொழிய, அருகிலிருக்கும் நெருப்பு முதலானவற்றுக்கும் மலராது. "செந்தழலே வந்தழலைச் செய்திடினும் செங்கமலம் அந்தரஞ்சேர் வெங்கதிரோற் கல்லால் அலராவால்" [பெருமாள் திரு 5-6] என்கிறபடியே. அதுபோலவே உண்மையறிவாகிற கமலம் ஆதி3த்யவர்ணனை திருமாலையே விஷயமாகக் கொள்ளுமேயொழிய சந்திரமௌளி முதலாய மற்ற தெய்வங்களை நோக்காது என்கை. *(உயிரும் தருமனையே நோக்கும்)* ப4க3வானையடையாத ஜீவர்களுடைய உயிர் உடம்பைவிட்டுப் பிரியும்போது த4ர்மராஜனான யமனையே சென்றடையும். அப்படியே அறிவும் த4ர்மஸ்வரூபியான தாமரையாள் கேள்வனையே சென்றடையும். *(தாமரை*

வித்யாதி,) ஜ்ஞாநமாகில் ஸ்ரீய:பதியை அறியுமத்தனை, மற்றொன்றை அறியாது. 72. "तत् ज्ञानमज्ञानमतोऽन्यदुक्तं" (தத் ஜ்ஞாநமஜ்ஞாநமதோऽந்யது,க்தம்) 73. "विद्याऽन्या शिल्पनैपुणं" (வித்,யாऽந்யா ஶில்பநைபுணம்) என்னும்படியே. 67.

---

யிலை நியதமாளுப்போலே, ஜ்ஞாநமானது அழகிய தாமரைப் பூவை இருப்பிடமாகவுடைய பெரியபிராட்டியார்க்கு வல்லபனான ஸர்வேஶ்வரன் ஒருவனையுமே சென்று பற்றுகிற்கும். ஜ்ஞாநமாகில் ஸ்ரீய:பதியைப் பற்றியல்லது நில்லாது என்கை. ப,க,வத்,வ்யதிரிக்த விஷயங்களைப் பற்றிப் பிறக்கும் ஜ்ஞாநமெல்லாம் அஜ்ஞாநகல்பம். "तत् ज्ञानमज्ञानमतोऽन्यदुक्तं" (தத் ஜ்ஞாநமஜ்ஞாநமதோந்யது,க்தம்) "विद्यान्या शिल्पनैपुणं" (வித்,யாந்யா ஶில்பநைபுணம்) என்னக்கடவதிறே. 67.

---

யான் கேள்வன் ஒருவனையே நோக்கும் உணர்வு) கருங்கடலை ஆறு நோக்குவதும், தாமரை கதிரவனை நோக்குவதும், உயிர் தருமனை நோக்குவதும் இயற்கை நியதியானாற்போலே, அறிவென்று ஒன்று உள்ளதாகில் அது தாமரையாளான லக்ஷ்மியின் நாதனான நாராயணன் ஒருவனையே நோக்கும். திருவில்லாத்தேவரான வேறெவரையும் நோக்காது என்று கருத்து. சிலருடைய அறிவு மற்ற தெய்வங்களையும் விஷயங்களையும் நோக்குகிறதே எனில்; அவ்வறிவுகள் அறிவேயல்ல; அறியாமையை ஒத்தவையே என்பதைப் பின்வரும் பிரமாணங்கள் பேசின.

"ஸம்ஜ்ஞாயதே யேந தத,ஸ்ததே,ாஷம்
ஶுத்,த,ம் பரம் நிர்மலமேகரூபம் ।
ஸந்த்,ருஶ்யதே வாऽப்யதி,க,ம்யதே வா
தத் ஜ்ஞாநமஜ்ஞாநமதோऽந்யது,க்தம் ॥"
[வி.பு 6-5-87]

[எந்த அறிவினால் தோஷமற்றதும், ஶுத்,த,மானதும், மிகவும் மலமற்றதும், ஒப்புயர்வற்றதுமான அந்தப் பரவஸ்து அறியப்படுகிறதோ, பார்க்கப்படுகிறதோ, அடையப்படுகிறதோ அதுவே ஜ்ஞானம்; அதைக்காட்டிலும் வேறானது அஜ்ஞானமெனப் படுகிறது.]

